ஓம்.

தத் சத்.

முத்துக்காமாக்ஷியம்மன் துணை.

ஸ்ரீமத் சிவானந்த சற்குரு தேசிக மூர்த்திகள் நீடு வாழ்க.

# சப்தப் பிரபந்தம்.





செல்லமுத்தம்மன்.

:இயற்றியவர்:

உ ளையார்கோவில் செல்லப்ப சுவாமிகள் பரம்பரை
ளையாங்குடி ஸ்ரீமத் சிவானந்த சற்குரு தேசிக
மூர்த்திகளின் சீடருள் ஒருவரும், பெருநாழி
சர்வமத ஐக்ய சாது சங்கத் திருக்கூட்டத்தில்
ரும், பெரியண்ணலவர்கள் தவப்புதல்வருமாகிய

## சின்னமுத்து என்ற சச்சிதானந்தம்,

சின்னுமா நகரம்,

203

ஓம்.

தத் சத்.

ஸ்ரீமத் சிவானந்த சற்குரு தேசிக மூர்த்திகள் நீடு வாழ்க.

காடல்குடி வித்வான்

**விவேகானந்தர் யென்ற மூ. குப்புச்சாமி பிள்ளை அவர்கள் இயற்றிய**

**சாற்றுக் கவி.**

திருவளர் செல்வச் சின்னுமா நகரிற் சான்றவர்
குலமதிற் செனித்த
உருவளர் சைவத் தவப் பெருந் தகையான்
கல்வியு மொழுக்கமுஞ் சிறந்த
இருவளர் சின்ன முத்தெனுங் கவிஞ னியற்றின
னேழ் பிரபந்தம்
தருவளர் பொதிகை முனிவனும் பார்த்துத்
தமிழ்க்குழு விவனெனத் தளிர்த்தான்




## மதிப்புரை.

பூமகன் படைப்பின் மேலாம் பூவுலகு. அதனின் மேலாம் கோமகன் பரதனுண்ட குலவுநற் பாரத கண்டம். மேவுரும் அதனின் மேலாம் தேவனல் ஆடல்பெற்ற திருப்பாண்டி நாடு. அத்தின் மேலாம் மூவகை வளமும் மிக்க முதன்மைசேர் இளசை மூதூர். அதன் ஒரு பகுதியாய சின்னுமா நகரித்திலே அரிய தவமுடை பெரியண்ண னவர்கள் புதல்வராய்த் தோன்றி, பெற்றோராற் பெற்ற சின்னமுத்து யென்னும் திருநாமம் உடையவராய், பருவ காலத்தில் கலை பல பயின்று உலகிய லுணர்ந்து நிலையல வென்று சலன மீக் கூண்டு சற்குருவடையும் பக்குவ மிக்குற வேதனம் அடையும் சாதனம் தனிவர மனத்திரம் பெற்று அனைத்தையுந் துறந்து வேத்தி யமர வேதனம் தனிவரப்பெற்ற உத்தம குருவை ஓடித்தேடி நாடிச் சென்று சத்திய சித்கன சாஸ்வத சாந்த அத்வைத ரூபத்தை அங்கைக் கனியெனச் சங்கையற நவில் சற்குரு சிவானந்தத் தன் னருள் முனிவரை இளையான்றன்குடியில் எழிலுறக் கண்டு அன்

னவர் அடிமிசை முடியுறத் தாழ்ந்து ஆவிபொருளாக்கை காமீந்து ஆத்தம் அங்கம் தானம் சற்பாவம் என்னும் சதுர்வித பணிபுரிந்து உடற் குயிர்போல் கட்கிமைபோல் ஊசிநூல் ஒத்துறைந்து சிரவண மனன நிதித்தியாசன வாயிலாக தத்துவம் பதார்த்த விசார வல்ல பத்தால் பரிபூரண பரமானந்த பரமசீதள பிரத்தியக் கபின்ன பிரஸ்ம சாக்ஷாத்காரத்தை பிரதிபந்த ரஹித மாகப்பெற்று உறை யும் நாளில் குருபர னருளால் திருமறை புகழும் சக்ஷிதானந்தம் என்னும் காரண நாமம் சூட்டப்பெற்று அவ் விளசைப்பதியி லமர்ந்தார். பன்னுள் பின்னுள் இன்னுர் தம்மைக் குருபரனேக்கி குருமொழி திருமொழி மறுமொழி யின்றெனக் குலவிடு மைந்த நின்னகர்க்கேகி மக்கள் மனேவி ஒக்கலோ டுற்று மறை மொழி பயிலத் திருமடம் அமைத்து அதிதியர் மதியவர் புதியவர்ப் பேணி அறநிலே பிழையா துறுவை யென்றேத குருவாக் கமிர்தெனக் கொண்டுறை யிவரும் அன்னதே பணியென அகமகிழ்ந்தேற்று தன்பதியுற்றுத தனிமடமமைத்துச் சற்சனர் பலருடன் சற்குரு வாக்கிய பாலனஞ் செய்து சார்ந்துறு நாளில் கலியில் கடவுளே வழிபடல் முறையென ஆரியர் மொழிமனம் ஆறியே அறிந்து புரிந்து பணிவாராயினர். அன்னவர் பின்னும் பதிகம் பலபல நிதியம் என வுணர்ந்து பல தேவ தேவிகட் கிதனில் பன்னிஞர் பாக்கள். அன ஞர் மன்னியே வாழ்க.

## ஸ்ரீமத். சி. வா. சற்குரு சுவாமிகள்.

திருவா ரிள்சைச் சிவானந்த மாபுரி சின்னுநகர்
கருவா தணேயறக் கல்வியும் ஞானமுங் காட்சிபெற
உருவாகி வந்துறை சின்னமுத் தென்னு முயர்தவத்தோன்
தெருள்வாய்மை மீக்கொளத் தேவதை மேற்றுதி
செய்தனனே.

———()———

28-3

ஓம்.

தத் சத்.

# முகவுரை.

தெய்வ அன்பர்களே!!

சுமார் 45 வருடங்களுக்கு முன் அடியேனுக்கு 18 வயதில் காதில் வலியேற்பட்டு சுமார் 6 மாதகாலம் கேள்விக்கு யிடங் கொடாதிருக்க அடியேன் தாய் கிரும தேவதையாகிய செல்லமுத் தம்மனை வழிபட்டு சயனித்திருக்கும்போது அம்மன் பிரசன்னமாகி 3 தினத்தில் வியாதி விடுதலையாகும் என்று சொல்ல காலையி லெழுந்து அடியேனை நீராட்டி அம்மன் சன்னதி சென்று வணங்கி நிலக்காப்பு பூசிவர அன்றிரவு காதின் வேதனை நின்றும், மறுநாள் வீக்கம் வத்தியும், அம்மனருளிய மூன்றும் நாள் செவிடு நீங்கி கேள்விகளுக்கு இடங்கொடுத்தது. அடியேனும் தாயும் சந்தோஷ முற்று அம்மனுக்கு மாலை சாத்தியும் மாவிளக்கெடுத்தும் நேமுகம் செய்தனம். மேலும் பனுவலியற்றி அம்மன் பாதமலரை வழிபட யெண்ணி சதிபதிகள் சொந்த நகரிலிருந்து வந்து அம்மனை தெரி சித்து புத்திரப்பேறடைந்ததை வழிநடை சிந்தாக இயற்றியதுடன், விக்கினேஸ்பரர், சுப்ரமண்யர், சங்கர நாராயணர், காசித்தலமான் யம், நவக்கிரக வழிபாடு, சூரிய தெரிசனம் என்னும் தோத்திரம் பாடி இருந்தனம். இப் பாடலில் கண்டுள்ள கற்பனை பிரகாரம் நகரம் அபிவிருத்திபெற்றும், மக்கள் பக்தியில் சிறந்தும், செல்வ மலிந்தும், சிறப்புற்ற மாளிகைகள் யுடையதாயானபடியால் யிது அம்மன் திருவருள் என்று நினைத்து இப் பாடல்களை புத்தக ரூபமாய் வெளியிட்டனம். வணக்கம்.

இப்படிக்கு.

அடியேன்,

சின்னமுத்து என்ற சச்சிதானந்தம்,

சின்னூர்.

ஓம்.
தத் சத்.



ஸ்ரீமத் சிவானந்த சற்குரு தேசிக மூர்த்திகள் நீடு வாழ்க.

## விக்கினேஸ்பரர் சோடச மாலை.

காப்பு.

வெண்பா.

பொன்னுலவு சின்னுநகர் பூமான் கணபதிக்கு
பன்னுதமிழ் சொல்மாலைப் பாவிசைத்து — இன்னலற
மற்றுப்பற் றென்னும் மறைமொழிவண் ணங்கோர்த்து
குற்றமற்றுச் சாததினேன் கொண்டு

நூல்.

திங்களோடவர் கொன்றை சூடிய செல்வனார் தரு செல்வமே
பங்கயாசன ஞதிதேவர் பரவநின்ற பொற் பாதமே
அங்கண் மாநில மெங்குமேயுனை யன்றியே பொருளின்மையால்
எங்குமா புகர் வதனனே தினம் ஏத்தியே மலர் சாற்றுவேன். 1

பிள்ளையார்.

அத்தியின்பழ மேகொடுத்துய ரர்த்தபூடணந் தருகுழ
வித்திரம்மென அளவில் மோக்ஷமெனக்கு வேண்டுமென நசைப்
பத்தியார் சிரங் குட்டியே செவி பற்றி மூன்று குதித்துமே
கர்த்ததாவெனத் தந்து வந்ததால் காரணப் பெயர் பிள்ளையே 2

விக்கினேஸ்பரர்.

திரிபுரத்தை யெரித்த வன்னுயர் தேவ தேவநின் றந்தைதான்
தெரியவுன்னை வழிபடாத செருக்கினால் ரதம் பொடிபட
அறியவந்ததெய் வீகனே யுனை அன்று சங்கரன் போற்றிட
விரியவிக்கினம நீக்கிநின்றதால விக்கினேஸ்பர நாமமே. 3

மாங்கனிநாதர்.

அந்திவான்பிறை கொன்றை மான்மழு அங்கையேந்திய சங்கரன்
கந்தவேளொடு வுந்தனையொரு காலம ஞால வலமதாய்
முந்திவந்தவர்க கெந்தன் கைக்கனி முறையில் நல்குவ
னென்றிட
எந்தையேயுல காகிநின்றனை யென்றுகைக்கனி கொண்டவா. 4

## கணபதி.

தேவமக்கள் விலங்குபூத கணங்களுக்கு முதன்மையாய்
சேவை பாத மகடு மாமுகஞ் சீர்கரம்பெறு கோலமாய்
பாவ நேதிசெய் நாலுமாகண பழமறைக்கு முதன்மையாய்
காவல்செய்யும்நீ யன்றியின்மையால் கணபதிப் பெயரானதே 5

## விநாயகர்.

சிரவணப் பொரு ளறியுமுன்னவர் சிந்தைசாதனக் கீரலே
பிரணவப் பொரு ளாகிநின்றதாற் பிள்ளையார்சுழி என்பரால்
மரண முற்பவ தீத மும்மத வாதபேத மகன்றுயர்
விரண வேக மகற்றும் வன்மையால் விநாயகப் பெயரானதே. 6

## திருக்கோகர்ணம்.

இலங்கைமன்ன னளித்தலிங்க மிருகரத்தினில் பற்றிட
மலங்கலங்கவே நீக்கி முச்சொல் வழுத்தியே புவிவைத்திட
கலங்கி ராவணன் வந்துநான்கை கரங்களால் வலித்தீர்க்கவே
பலங் கொளும்படி நீண்டமாபல லிங்கமானதுன் பான்மையே 7

## உபயகாசி.

வேதவித்தகர் வாரணுசியில் விண்டுவேபர தெய்வமாய்
ஓதுவித்தலி னூடலுற்று வுபயகாசியுந் தன்பெயர்
பாதமுற்று வுயிர்துறந்தவர் பண்டுபோல்பர மோக்ஷமே
காதலுற்றவர் இன்றுநின்னருள் கழுதை யுற்பவ மானதே. 8

## ஜெயப் பொருள்.

தொண்டு பூசையில் ஔவை கைலையில் சுந்தரர்க்குமுன்
சென்றதும்
பண்டுமூவர் செருக்கு நின்பெரும் பால்புளைக்கையால் விட்டதும்
கண்டுவள்ளியைக் கானில் மாமணங் கந்தவேட்கு முடித்ததும்
தெண்டிரைக் கடல் சூழ்புவிக்கெலாஞ் ஜெயஜெயப்பெயரானதே 9

## வழிபடு கடவுள்.

தெள்ளுபாரத மேருவில் மறைத் தீம்சொலாக வரைந்ததும்
உள்ளம் வெம்பிய சூரனை யன்று ஓர்மருப் பொடித் தெய்ததும்
அள்ளு பொய்கை யமர்ந்து வேண்டுவோர்க் களவிலாப்
பர மோக்ஷமே
வள்ளலாக வழங்கலா லின்று வழிபடுந் தெய்வமானதே. 10

முச்சந்தி பிள்ளையார்.

தாயையேநிகர் பெண்விரும்பி சந்தியி லமர்ந்தாயென
ஆயுமாறறி வில்லவர் அறிகில்லர் மெய்யுரை யன்பர்தன்
சேயதாயுல கன்னைபோலுனஞ் சிறந்தலக்ஷணந் தேரிலன்
பேயுமாறறி முச்சந்திப் பிள்ளை யென்று நான்மறை பேசுமே. 11

சாப சதுர்த்தி.

கோடொடித்து அவுணனாவி குடித்த அன்று அமரர்கள்
தாடலைக்கொ டளித்த போனகந் தான்புசித்தக டேறவே
ஓடுவான்மதி கண்டதும்நகை கொண்டுசாப மடைந்ததும்
கூடிவானவர் குட்டினார் சிரங் கொண்ட சாப சதுர்த்தியே. 12

காவிரி வரலாறு.

கும்பமாமுனி கங்கை மொண்டுதென் கூடமாமலை குறுகுநாள்
உம்பர் கோன்பொழில் வாடயாழ்முனி யுன்னி யுன்னரு ளுண்ணி
கம்பியாது கமண்டலந்தனைக் காகமாய்க் கவிழ்த்தேகினாய் [யே
நம்புவார்க் கருள் காவிரிப் பெயர் நானிலம் பெறலானதே. 13

நம்பியாண்டார்.

நானிலம் புகழ் நாரையூர் மறை நம்பியார் சிறு நம்பிமுன்
போனகம் படைத் தானெய் கொண்டுனைப் போற்றியே புசிப்பா
மோன முற்றனை யீன முற்றதாய் முட்டுவான் தலை மோதவே[யென
தீனுமுற்று மருந்தி நம்பிபால் செப்பினாய் மறை தேறவே. 14

மூவர்பாடல் காண்பித்தது.

மூவர் செந்தமிழ் காணவாவில் முதிர்ந்த சோழன்முன் நம்பிபால்
சேவை கண்டர சப்பெருந்தகை தீனளிக்க நீ யுண்டதும்
காவல் கொண்டசெம் பாசுரம்பொது காட்டினாயுல குய்யுவுன்
சேவடித்திற மேபிடித்தவர் சென்மமாவது மின்மையே. 15

மும்மனைவியர் லக்ஷணம்.

தொல்லைவேத முடியமாய சிற்சொருப மாகிய சோதிமுன்
எல்லை யாகம மோதுகின்றவர் யிசைப்பர் முக்குண சத்தியை
வல்லபை யொடு சித்தி புத்தியை மணந்த தென்பது மடமையே
இல்லை யில்லை யிரவிமுன்னிருள் என்றுநான் மறையோதுமே. 16

வாழி.

வாழியே மாமுகன் பிள்ளையார் விக்கினேஸ் மாங்கனியே

வாழி கணபதி நாயகர் மாபல வாரணசி
வாழி செயவுன் வளிசெயும் நம்பிசொல் மாமறையும்
வாழி சதுர்த்தி நற் காவிரி மூவர்சொல் வாழியவே. 17.

—— சுபம் ——



ஓம்.
தத் சத்.

# திருச்செந்தூர் சுப்ரமண்யர் சோடச மாலே.

## விநாயகர் காப்பு.

மங்களஞ்சேர் செந்தூரில் வாழ்முருகன் சேவைசொல
ஐங்கரனே வேலனேயென் னம்பிகையை — திங்களணி
செஞ்சடையா னெங்கள் சிவமறியுஞ் சற்குருவின்
னெஞ்சகமே தஞ்சமென னேர்.

## நூல்.

## கட்டளைக் கலித்துறை.

பூவிலயன்முதல் முப்பத்து முக்கோடி புண்ணியரும்
சேவைபுரியத் திருச்செந்தில் வந்தசெஞ் சேவகனே
காவடி வைத்த கடையேனை யாளுமை காதலவுன்
னேவற் பணிசெய எல்லா நலமுமூண் டிப்பிறப்பே.

இப்பிற விப்பெருந் துன்பக் கடல்கடந் தேகுதற்கே
மெய்ப்பயன் றந்தருள் செந்தி லுகந்தருள் வேல்முருகா
தப்பொருகோடி தவறி நடக்கிலுன் தாள் நினைந்து
சுப்பிரமண்யவென் றோதுவார்க் கிங்கொரு துன்பில்லையே.

இல்லையே செந்தி லிறைவனைக் காண இருவினையும்
அல்லும் பகலுன் சிரவண மேபிற வல்லதில்லை
கல்லையும் பெண்ணெனக் கால்வைத்துக்காட்டிய கண்ணபிரான்
செல்ல மருகா முருகா சிகிப்பரித் தேசிகனே.

தேசிகா செந்திற் கிறைவா திருவருள் செய்வதற்கே
ஆசைகொண் டுன்கழல் நேசம்வைத் தேனெனை யாதரிப்பாய்
வாசியே கொண்டு வலமிட முஞ்சுழி வாங்குவதென்
மாசி மகமெனப் பேசஇருவினை மாற்றுவையே.

மாற்றுயர் தங்கவடிவேல் முருகா மயூரமிசை
தோற்றுவா யுன்றன் துணையடிப் பேறினைச் சொல்லிமலர்
ஏற்றியே நின்புகழ் ஏற்றிட என் துதி ஏற்றருள்வாய்
கூற்றுதைத் தோனருள் மைந்தாசெந் தூர்வளர் கொற்றவனே.

கொற்றவா செந்திற் குமரா குருபரா கோகனமா
துற்ற மருகா முருகா குகா கந்தா மூலமறை
சொற்ருய் கமலத் துறைவோன் செவிப்புக சூர்மடிய
பெற்ற வுமைமக வேழைக் கிரங்கும் பெருந்தவமே.

தவம்பெற் றுயர்வள்ளி தெய்வானை யுன்சரண் தானடைந்து
பவமற் றுயர்கதி சேர்ந்தா ரறிகிலர் பாரி யென்பார்
நவம்பெற்ற கோளும் பணிவார்க் ககற்றுவான் நம்குமரன்
சிவம்பற்றிய திருச் செந்தூரமர்ந்தருள் தேசிகனே.

தேசுவிளங்கிடக் காத்திகைப் பெண்வயின் சேயெனவும்
வாசம் விளங்குஞ் சரவணப் பொய்கையில் மாமகவாய்
பாசம் விளங்க உமைதன முண்டு பவவிருளை
நாசந் துளங்கிடச் செந்தூரமர்வள்ளி நாயகனே.

நாயகா தொண்டர்செய் நற்றவத் துற்றவா நான்மறைக்கும்
சேயதா யம்பிகை சேயதாய்ச் செந்தில்வாழ் செய்யகழல்
நாயினேன் கண்டு களிக்கப் பெற்றேன் செல்வ ஞானமென்றே
வாயதே சொல்லவும் வாழ்த்தவும் பெற்றதென் மானிடப் பிறப்பே

பிறப்பே யறவிடில் முத்தியென்பாரது பேதமையுன்
சிறப்பாகிய திருச் செந்தூரில் வந்தடிச் சேவைகண்டால்
பிறப்பிறப் பின்றி நலமோக்ஷ மாமெனப் பேசுமறை
துறப்பு உனையடைந் தெல்லாம் விடுதல் சுகமருளே.

அருள்வாய் சரவண பவென் றுரைக்கி லருவினைபோம்
குருவாகி வந்தெனை யாட்கொண்ட தேசிக கொற்றவவுன்
பெருவாழ் வெனகருத திருவடி தந்திடப் பேசவற்ருே
வருவாய் சிகிமேல் கருவாதனை கெட வாழ்விக்கவே.

வாழ்வைக் கொடுக்குஞ் சரவணப வெனுமந்திரமார்
தாழ்வைக் கெடுக்குமுன் தாள்மலர் காண சலஞ்செய்நவ
கோளைக் கெடுக்குமுன குற்றேவல் செய்ய குலமுதனன்
நாளைப் பெருவிழாக் கண்டுகளிக்க நலம்பெருமே.

நலமாந் தணிகை பரங்குன்றம் ஏரகம் நற்பழநி
வலமாந் திகழ்பல குன்றுதோ ரூடல் மகிழ்ந்து செந்திற்
தலமீ தமர்ந்துல கெல்லாம் புரக்குமென் சண்முகவேள்
குலமேவிய தவம் என்னை யுனக்குக் கொடுத்ததுவே

கொடுக்குஞ் சரவண பவென் றுரைக்கக் குறித்த வெல்லாம்
விடுக்குந் திருவடிப் பேறடைந்தால் முன்வினை யனைத்தும்
அடுக்கும் பலசெல்வங் கார்த்திகேயா வெனிலாசை முற்றும்
தடுத் தென்னையாள் சுகம் செந்தூர் முருகவேள் தந்தருளே.

தந்தையுந் தாயும் தமருமென் சுற்றமும் சற்குருவும்
பந்தமகற்றிப் பயன்றரு செல்வமும் பாஸ்கரன்போல்
சிந்தை விளக்குஞ் சடாக்ஷர நாம செபதபமும்
செந்தூ ரமர்ந்திடுங் கந்தவேள் பாத தெரிசனமே.

தெரிசனங் கண்டு களித்தார்க் கிடர்ப்படு சென்மமில்லை
மருசனனங் கொடு வந்தாலுன்பாத மறப்பதில்லை
வரமிகு பன்னிரு கண்கொடு பார்த்து மனமகிழ்ந்து
புரையறு தேசிகென் சென்னியில் சூட்டிடு பூங்கழலே.

### முற்பாட்டின் முதற்குறி

பூவாழ் பிறப்பில்லை தேசிகா மாற்றுகொற் றப்புவிமேல்
ஆவதவமே நமக்கருள் நாயகா ஆண்பிறப்பே
சேவை யருள்வாய் நலங்கொடு தந்தை தெரிசனமே
காவலெப் போதுநம் செந்தூர் முருகன் கழலிணையே.

### வெண்பா.

தேவா கடம்பா சிகிவாக னுசெந்தூ
ராவா தமியேற் கருள்புரிய — நீவாமுன்
நேயா பொதுவர் நிறையுந் துகில்கவர்மா
மாயோன் மருகனே வா.

— சுபம் —



ஓம்.
தத சத்.

# சங்கரநாராயணர் சோடசமாலை.

## விநாயகர் காப்பு.

சங்கரனை ஆதிசிவ சங்கரியாங் கோமதிமேல்
துங்கமுறும் பாமாலை சூட்டுதற்கு — மங்களஞ்சேர்
ஐங்கரனை வேலனையென னம்பிகைபொன் னம்பலனை
எங்குருவை வாணிபதம் ஏத்து.

## கட்டளைக் கலித்துறை.

காருலா வும்பொழில் தென்னன் பொதிகை நால் காவதமே
சீருலா வுந்திருக் குற்றாலந் தெல்லை திசை வடக்கில்
ஊரெலா மையன் திருநாம மும்மை யுலகினுக்கும்
பேரெலாஞ் சங்கரன் கோமதி நின்புகழ் பேசுவனே. 1

பேசுந்தலங்க ளனந்தமுண்டாஞ்சிவப் பேரனைத்தும்
ஆசில் மறைகள் அறைந்திடுஞ் சங்கர னுதியெனறே
பேசினன் கண்ணனுஞ் சங்கரனுன்புவி பேணவென்ருன்
தேசுசேர் சங்கர நாமமனுதி சிவமயமே. 2

சிவசங்கர நயினர் கோவில் காணவென் சிந்தை வைத்தால்
பவசங்க மெல்லாங் குடிபோம் பரிதிமுன் பாரிருள்போல்
புவனங்க ளீன்றிடும் அம்பிகை கோமதி பூசையெனும்
தவசிங்கு தெய்வதக் காக்ஷியைக் காண்பார் தவசிகளே. 3

தவசுப் பெருவிழாக் காணவென் கோமதி சங்கரனை
மவுசிற் கடகமாந் திங்களுத்ராட மதிநிறைவில்
சிவபகதர் சூழ்திருத் தோரணி வீதியிற் சென்றுனது
பவனித் திருவலக் காக்ஷியைப் பெற்றதென் பாக்கியமே 4

பாக்கியம் பெற்றுப் பவிசோ டிருக்கிலென் பார்தனிற்சி
லாக்கிய மில்லா தழியு மழிவற்ற ஆன்மசிவ
பாக்கிய மாஞ்சற் குருநூல் மொழியிற் பயின்ற மகா
வாக்கிய மெய்ப் பொருள் சங்கர நாம நாம் வாழ்த்துவமே. 5

வாழ்த்தி வணங்கத் தெரியாத காலத்தென் வஞ்சமனம்
வீழ்த்தி யவாவினின் னேமுகங்காட்டி விருப்பளித்து
ஆத்திரந் தோண அருட்குருவாயுன் னடித்தொழும்பின்
பாத்திய னுக்கிய சங்கரா என்குறை பார்த்தருளே. 6

பார்த்துத் திருவால யச்சேவைப் பொன்னடிப் பாங்கரிலோர்
தீர்த்தமும் புத்துமண் தெய்வீகச் சாந்து மென்சென்னிமுதற்
சாத்துவ னங்கம் நிறையவும் பூதி சலனமிக
வார்த்த பிறவியுஞ் சங்கரா விட்டது அங்கனமே 7

அங்காரனுதி நவக்கோ ளனைவந் தடுத்திடினும்
ஓங்காரமாதி பஞ்சக்கர மோதா தொழிந்திடினும்
சிங்கார மாமுன் திருவடிப் பேறினைச் சிந்தை வைத்துச்
சங்கரா வென்பவர்க் கில்லையெத் துன்பமுஞ் சத்தியமே. 8

சத்தி சடாதரி கோமதி ஞான சவுந்தரியெம்
பத்திநி றைந்த பரிபூரணி செக பாரதிசா
நித்தியம் அல்லும் பகலுமெப் போதுமென் நெஞ்சகத்தே
சத்திய மாக அமர்ந்திடு வாள் சிவ சங்கரியே 9

அரியயன் விண்புவி தேடியுங் காணு அடிமுடியுன்
திருவடிப் பேறினைப் பெற்றூர்க் கிருட்கலி தீர்ந்திடுமே
தருவினையினறி இருவினை இல்லையுன் தன்மையினுல்
சருவமும் நீகுரு தேசிக னேசிவ சங்கரனே. 10

சங்கரி சாமளை தாமோதரன்றன் சகோதரிநீ
அங்கையில் அக்கினை வைத்துத் தவச்செய லாற்றுவதேன்
எங்குறை தீர்ப்பதற் கென்பேன் அவல மெதுவரினும்
சங்கரிப்பா ளெங்கள் கோமதி ஞான தயாபரியே 11

பரியேரி வந்துதென் பாண்டியர்க் கின்பப் பவிசளித்தாய்
நரிபரி யாகவே காட்டியே வாதவூர் நண்பருக்கு
உரியவ னுகினை யன்றியும் சங்கரா வுன்னடிப்பேர்
திருவருள் கொண்டு பெருவாழ் வளிக்கும் நற் றெள்ளமுதே. 12

தெள்ளமு தாகுமுன் சேவையின் காக்ஷி தெரிசனமே
அள்ளிய செல்வம் அடுக்கடுக் காய்வரி னுவதென்னும்
கள்ளமில் நெஞ்சங் கனிந்தே யுருகிக் கழல்பணிந்தால்
உள்ளிய தெல்லாங் கொடுப்பாளென் கோமதி உத்தமியே 13

உத்தம மத்திம மென்பார் அதமனிங் குத்தமனே
சத்திய ஞானவா னந்தப் பொருளினைத் தானுணர்ந்து
தத்துவ சோதனை செய்து சொரூபந் தனையடைந்து
பத்தியாற் சங்கரா வென்பார்க்கி தெல்லாம் பலித்திடுமே. 14

பலியெடுத் தாகிலும் பாதார விந்தம் பரவினர்க்கு
கலிவிடுத் தேகிடுஞ் சொல்லாது நூறெனுங் காதம்விட்டு
நலிபடுந் துன்பமென் ஞளும் நமக்கிலை நாவெடுத்து
சொலினடும் வஞ்சங் கரன்கோமதி புகழ் சொல்லுகவே 15

சொல்லுவன் சங்கர நாராயண வெனில்த் தொல்லைவினை
ஒல்லைவிட் டேகிடும் என்றே பழமறை ஒலமிடும்
எல்லையி லுன்ற னிணையடி சென்னிவைத் தேழையர்க்குன்
செல்வமலிந்து சிவானந்தத் தேனுளந் தித்திக்குமே. 16

திங்கள் சூழ் வேணியன் பூதிதிருமணுஞ் சேர்ந்திலங்க
சங்கர நாரண னென்றிரு நாமமுந்தா னெனவே
சங்கரிக் குற்ற சமுசயந் தீர்த்துத் தரிசனந் தந்
தெங்குரு தேசிக ஞயென்னுளத்தி லிலங்கியதே. 17

## முற்பாட்டின் குறிப்பு.

பார்த்திபன் காருலாம் பேசுஞ் சிவதவ பாக்கியமே
வாழ்த்துவன் பார்த்தரு ளங்காரசத்தி வருமரியே
ஊர்ததுவ சங்கரி யாம்பரி தென்னமு துத்தமர்க்கே
பார்த்துப் பலியிடச் சொல்லுவன் சங்கரன் பாடலையே.

——— சுபம் ———

ஓம்.
தத் சத்:



## காசித்தல மான்மியம்.

### காப்பு.

காசிதல மான்மியத்தைக் காதற்பா மாலைசொல
வாசமலர் கொண்டு வழிபடுவான் — பூசிதனும்
துண்டி கணநாதன் துணையடியென் நெஞ்சிலுறக்
கண்டிறைஞ்சி னேனவன்ருள் காப்பு.

## நூல்.

காருலவும் பூம்பொழிலும் கங்கையுஞ்சூழ் காசிபுகழ்
சீருலவுந் தெய்வத் திருப்பதியில் — பேருலகில்
வந்துபா சண்டரெனும் வந்தனைசெய் தந்திபகல்
சிந்தனைசெய் வார்க்கீரந் திரு. 1

திருமா லயன்மகவான் தேவர்களதம் பன்னி
பெருமா தவமிருந்து பெற்ற — பெருவாழ்வு
காசிப் பதியாகும் கண்டுவிண்ட மாதவரே
பாசத் தளையறுத்தார் பண்டு. 2

பண்டுதவஞ் சற்றுமிலாப் பாவியேனும் பரத
கண்ட நுதல் மத்தியெனும் காசியிலே — மண்டியொரு
அஞ்செழுத்துந் தெய்விகமும் அன்புமின்றிக் கங்கையிலே
துஞ்சுவார்க் கில்லைகாண் துன்பு. 3

துன்பம் பயமிடிநோய் சோரங் கொலையணுகா
தின்பம் பொருளறம்வீ டெய்துமே — என்புறுகு
தேசுமிக்க மாதவருந் தெய்விகமும் கங்கையுஞ்சூழ்
காசிநக ரடைந்தக் கால். 4

காலங் கரும நியதிவிட்டுக் கங்கையிலே
தூலந்தனைவிட்டுத் துஞ்சினார்க்கு — மூலமுதற்
றந்தை வலச்செவியில் தாரகத்தை யோதிமுத்தி
தந்துபவ நீக்கிடுவார் தான். 5

தானந் தருமதவஞ் சார்ந்தபுகழ் காமியமாய்
ஊனமின்றிச் செய்துவா னுற்றலென் — ஆனபின்பு
ஓசி லஞ்ச வாடகைவீ டுற்ற சுதந்திரமோ
காசிப் பதிநமது காணி 6

காணக் கிடைத்திடுமோ காசிப் பிரான்சேவை
ஆணக் கிடையா அறிவிலர்க்கு — மானிலத்து
முந்தை வினைதேய முத்திநலங் காட்டுமறை
அந்தநிலை யுணர்வார்க் கன்றி: 7

அன்றறிவா மென்னு தறஞ்செய்க வென்றுமறை
நின்றகுறள் வள்ளுவர்சொல நிச்சயமேல் —இன்றொருவன்
காசித் திருப்பதியைக் காணுவோ மின்றெனவே
ஆசைப் படுதலன்றோ ஆறு. 8

ஆருற் கடந்து அதீத நிலை யுணர்ந்து
நீருருந் தொண்டர் நெறிபேணி — பேறுதரு
கங்கை படிந்துவிசு வேசர் கழல்பரவி 9
அங்கம் விடுதல் பேரன்பு.

அன்புக் கிருப்பிடமாம் ஆனந்த வாரிதியாம்
இன்பக் களஞ்சியமாம் என்பவமாம் — துன்பம்
அறுத்த சிவானந்தம் அடியிணையைப் போற்ற 10
கருத்துயர் தீர்ந் தெய்தலாங் காசி.

## ஆசிரிய விருத்தம்.

சத்திமா லயனந்தி ராதியை ராவதம் தன்போத மற்றுதவமே
சார்ந்து அருள் பெற்றுய்ந்த தன்மையும் பத்தியொடு எத்
தவரும் அத்தலமதில்
மித்தையா முடல்விட்ட பேர்முத்தி யடைவதும் வியாசனின்
கருவமதுதான்
வேறோடு அற்றதும் மதபேத மில்லாது வேண்டுவோர் பூசிப்பதும்
நித்திய நிராமய நிரஞ்சனப் பொருளதாய் நீதிசேர் லிங்கவடிவாய்
நிலைமையுறு காசிவிசு வேசர் பொற்கழல் பெருமை நிறைவுவுற
அடியனுக்கு
இத்தரையில் சொல்வதற் கியலுமோ என்றவரை யிப்பதிகமும்
பாடினேன்
ஈசனு மவன்றனடி யேத்துமிப் பாடலும் யென்றென்றும்
வாழ்க வாழி.

---

ஓம்.
தத சத்.

## நவநாயகர்கள் தோத்திரம்.

### காப்பு

நாயிரே ஆதி நவநா யகர்சேவை
ஆய கலைகொண் டடிபேண — நேயமுடன்
தந்தை வலமாய்த் தருகைக் கனிகொண்ட
தந்திமுக வன்றுள் சரண்.

## சூரிய பகவான்.

பூவலங் கொள்ளும் கதிரோனை யிந்தப் புமிமீதி லேழைபுகழ்சேர்
பாவலங் கார மலர்மாலை கொண்டு பதமந்தி காலை பணிவேன்
ஆவலன் போடு பதினொன்று பத்து அறுமூன்று வீட்டிலடைவே
நீவிலங்காது நின்று லெனக்கு நிலையாகு முத்திநிலையே. 1

## சந்திர பகவான்.

ஈராறு நாலு கலையான சோதி இரவே கழித்து இறைவன்
நீராறும் வேணி முடிமீதமர்ந்த நிலவேயுன் நாமமறவேன்
ஆறேழு பத்து பதினொான்று மூன்று மவன் சென்ம
வீட்டிலடைவே
பேரு திருத்தி யெனிலைய மில்லை பெருவாழ் வெனக்குவரவே. 2

## சேய் சனி ராகு கேது

சேய்பாம் பிரண்டு சனிநால்வர் சேவை திரமே நினைக்க மனமும்
ஆய்கின்ற நல்ல குணமேவியுன்ற னடியே முடிக் கணணிவேன்
காய்கின்ற ஒன்ப திடம்விட்டு மூன்றார் பதினொன்று சட்டமகலா
தாய்கின்ற நான்கு கிரகாதி கட்கு மதுநன்மை எற்கு மருள்வாய்3

## புத பகவான்.

இதமா யியன்ற நவ நாயகர்க்கு ளிந்துக் கியன்ற மகவாய்
புதனென்று வாரத் துறைகின்ற தேவைப் புவிமீதிலேழை
புரிவேன்
பதினொன்று பத்து எட்டாறிரண்டு பதிநின்ற பலனை யருள்நீ
கதியென்று வுன்றன் கழல்மேவி நின்ற கடையேனை யாள்
கருணையே. 4

## வியாழ பகவான்

பொன்னு டளிக்கும் அமரா திபர்க்கு புகழே கொடுத்து மிகவும்
தன்னுடல் பெற்ற குருதேசி கன்றன் சரணே பிடித்த னடியேன்
பன்னொன்று ஒன்ப தேழைந்து ரெண்டு பதியான வீடு ரவி
என்னாளும் நிற்க ஒருதுன்பமில்லை இறைவாயெனக்கருள்வையே

## சுக்கிர பகவான்.

அசுரர்க்கு ஞான குருவா கியென்றும் அழிவற்ற செல்வமருளும்
உசனென்ற வெள்ளி மறையோனை யென்ற னுளமே யிருத்தி
யுணர்வேன்

தசம் ஆறு ஏழு யிடம்விட்டு ஒன்பதி டமேவி நிற்பதகலா
திசையோடு கிற்க வசையேது மில்லை யிறைவா எனக்கருள்வயே

### சனிபகவான் வல்லமை.

பாராளும் ராம னள னரிச்சந்திரன் பாண்டவர் புரூரன்முதலோர்
தேரோடு மாலே தெருவூடுழன்று சிறுமைக்கு ளடிமைவசமாய்
பாரோர் சிரிக்க வினையாடி முன்னைப்பவிசுங் கொடுத்த பழையோ
காராரு மேனி சனியீஸ்பரன்றன் கழல்சூடியா னென்மனமே [ன்

### நவக்கிரக பான்மியம்

பகலவனோ டிந்து சேய்புந்தி பொன்னன் பாம்பிருவர் சுங்கன் மந்தன்
இகல்நன்மை செய்வா ணவகோளை முன்னை யிறையோன் வகுத்த முறையில்
சகவாழ்வில் நின்று உழல்வார்கள் தம்மை சவலத்து லாழ்த்தும் நிலையே
அகமென்று தன்னை அறிவார் பிரஹ்ம அஸ்மியாய் வாழிவ் வுலகே 8

—— சுபம் ——

ஓம்.

தத் சத்.

## சூரியபகவான் தோத்திரம்.

### காப்பு.

பார் விளக்குஞ் சோதிப் பகலவன்து வாசதனும்
பேர் விளக்கிப் பாவுரையிற் பேசவே — நீர்சிறக்கும்
செஞ்சடை யானின்ற சிவக்களிற்றை யான் துதிப்பேன்
கஞ்சமலர்ப் பாதம் கனிந்து.

### கட்டளைக் கலித்துறை.

### நாமம் 12.

வைகர்த் தனனேவி வஸ்வத மூர்த்தி மார்த்தாண்டனனே
கைபாஸ்க் கரனே ரவிமூர்த்தி லோகப்ர காசனனே
பொய்லோக சாக்ஷி திருவிக் கிரமபோ தாதித்தனே
தெய்வத சூர்யம் சிவாகன போற்றி திவாகரனே.

### ராசி 12.

மேசம் ரிஷபம் மிதுனம் கடகம்பின் மேவுசிங்கம்
தேசுறும் கன்னி துலாங்காண் விருச்சிகஞ் சேர்தனுசு
ஆசில் மகர கும்பம்மீ னஞ்சோதி யருக்கனவன்
ராசியீ ராறினில் திங்களொன் ருக நடத்துவனே. 2

### மாதம் 12.

சித்திரை வைகாசி ஆனியோ டாடிசே ராவணியும்
கர்த்த னருள் புரட்டாசியோ டப்பிசி கார்த்திகையும்
அத்தனுள் மார்கழி தைமாசி பங்குனி யாறிருது
உத்தம வெய்யோன் பலநாமம் பெற்றிங் குலாவுவனே. 3

### பாத ஊழியர் 7.

நன்முனி வோர்மறை யோதவும் ரம்பை நடித்திடவும்
இன்னிசை தும்புறு நாரதர் வீணை யிசைத்திடவும்
பன்னக ராதி சுமக்கவும் ராக்கதர் பற்றிவர
இன்ன தரக்கர் பகலவன் தேரை யியக்குவனே. 4

### சின்மூத்திரை துதி

காரிருள் நீக்கும் சிவசூரிய னெழுங் காலையில் முன்
நேரிந கைவிரல் பின்னிமூன் பின்னிரு நேத்திரம் வைத்
தாறிரு நாமமுஞ் சொல்லித் தொழுவரர்க் ககவிருளை
வேரறக் கொய்துவுள் மெய்ஞானச் சோதி விளக்குவனே. 5

### பெருமை.

பல்லாயி ரங்கோடி அண்டத்து உட்புறம் பாதலத்தும்
பல்வேறு யோனி சராசரம் யாவுக்கும் பந்தமின்றி
அல்லெனுஞ் சொல்லை யகற்றிப் புறங்கண் டருள்கதிரோன்
நல்லொளி காட்டிப்பின் கால அளவையும் நாட்டுவனே. 6

### அழவுத் தானம்.

எண்கொண்ட கன்ன லறுபானுள் வார மிணைந்த பக்ஷம்
மண்கொண்டு லாவு வாய்திங்க ளோர்ராசியில் வக்ரமற்று
பண்கொண்ட வேதம் அயனம் வருடமாய்ப் பாடுமென்றால்
கண்கண்ட தெய்வம் நீயன்றி வேறேசொல் கதிரவனே. 7

### சுடரில் கங்காஸ்நானம்.

கதிரவன் சோதியில் விண்துளி யாடிடக் கங்கைபல
நதிகளின் மூழ்கியுன் ஞமமீரா றும் நவின்றருளின்
விதிமுறை சுற்றிப் பணியி லெய்தாநிதி மேவுமென்றே
முதுமொழி ஈசல் சொல் ரிககாதி வேத முழங்கிடுமே. 8

### தெய்வப் பிரத்யக்ஷம்.

கால அளவையுங் காட்டி நமனுக்குக் காலனென
சால அளககுங கருவியாய் நின்று சமனிருந்து
ஞால முழுதும் உணவலஞ் சுற்றநா தாந்தமுடி
ஆல முண்டீசன் அருளபெருந் தெய்வம்நே ராதவனே. 9

### வழிபடு தெய்வம்.

காலையும் மாலையுச்சிக் கடும்பகல் எக்காலத்தும்
சாலவெச் சமையத தோர்க்கும் தபனனே வணங்குந்தெய்வம்
மூலமா மிதனைக காணபார் முடிபொரு ளைவையுங் காண்பார்
வாலறி வுடையன் சோதி வழங்கினன வாழ்க வாழி. 10

—— சுபம் ——

ஓம்.
தத சத்.



## செல்லமுத்தம்மன் துதி.

பத்தி தருசெல்ல முத்து திருவருள் பாடுதற்கே
அத்தி முகவன்தெய் வததிபாகனதிக ழம்பிகையை
தத்த மெனப்பொது நிர்த்தன மாடிய தாண்டவனை
முத்தி கொடுத்தருள் சற்குரு வாணிதாள் முனனிற்கவே, 1

பூதாதி யற்றவா போதத்தில் வாழ்ந்திடும் பூமயிலை
ஞாதாதி யற்றவர் ஞானத்தி லூற்றுரை நல்லமுதை
சேதாதி யற்றவர் சிந்தை யமர்ந்திடு செல்லமுத்தை
பேதாதி யற்றவென் னுளளததி னூடுநான் பெற்றனனே. 2

உன்னும் பொருளல உன்னற் பொருளல உன்னும்பொருள்
மன்னு மொளியல மாயாவிருளல மன்னு மொளி

பன்னு மொழியல பன்னு மொழியல பன்னுமொழி
சின்னுக் குதவிய பொன்னகர் வாழ்ந்திடு செல்லமுத்தே. 3

பத்தி யென்பேன் மனப் பத்தியில்லேன் யென்ன பத்தியுள்ளே
சத்தியம் உன்னிரு தாள்முடி வைத்தேன் தயாபரியே [ன்
சுத்த பரத்தி லபின்னமென் றுன்னில் தோன்றுவற்கே
சித்தி யெலாந்தரு முத்தி கொடுத்தருள் செல்லமுத்தே. 4

என்னேரம் யானுன் னடிதனைப் போற்றி யிறைஞ்சுதற்கே
உன்னருள் தந்து தமியேனைக் காப்பது உன்கடனே
மன்ன னிளசையன் சின்னு வெனுமங்கை பாலளித்த
சின்னூ ரெனத்திகழ் நன்னகர் வாழ்ந்திடு செல்லமுத்தே 5

மாதவஞ் செய்திடுஞ் சின்னுவெ னும்பொது மாமகள்சீர்
மாதவன் பூசகி பொன்னனை யாள்முனம் வாசனையால்
காதல்கொண் டம்பிகை பூசையி னுள்ளங் கசிந்துருகி
சாதனங் கொண்டுமை யனபர்க் கருளுவான் தங்கினளே-6

தில்லை வளர்சிவ காமிதிருவருள் செய்வதற்கே
தொல்லை வினைப்பயன் சின்னு நகர்வந்து தோன்றியநாள்
செல்வ மலிந்து திகழப் பழமறை தேர்ந்த நல்லோர்
வல்லவி செல்ல முத் தென றுரை நாமம் வழங்கினரே. 7

வழங்கிடும் செல்வமும் கல்வியும் திங்கள்மும் மாரியுமே
விளங்கிடுஞ் சென்னெல்முப் போகம் பசிப்பிணி வீழ்ந்திடுமே
தழைந்திடுஞ் செங்கோல் அறமுத நான்குந் தருமனவாக
களந்தரி யப்படாச் செல்லமுத் தேயுன் னருட்பெருக்கே. 8

வைகலெழுந்து நன்னீர் மூழ்கி வாசமல ரெடுத்தென்
மெய்வலம் வந்துன் னடிபோற் றிறைஞ்சும் விருப்பருள்வாய்
பொய்தகை நீத்தெழிற் செந்தமிழ் கொண்டுனைப் போற்றுவதே
செய்தவ மன்றிச் செயல்வேறு கண்டிலன் செல்லமுத்தே 9

காலங் கடந்த கதியல்ல வோவுன் கழலிணையென்
பாலன்பு வைத்தருள் செல்லமுத் தென்னும் பராசத்தியே
மூலமென் றேதுங் கடகரிக் கன்று நீ முத்தியருள்
மாலவன் றங்கையே சின்னு நகர்வளர் மாமணியே. 10

ஆதிவராகி அபிராமி செல்வி அருமறையின்
சோதிசொரூபி சிவகாம சுந்தரி தோன்றுசிவ

நீதியில் நின்றிடு செல்லமுத்தே யெந்த நெஞ்சகமாம்
வீதியில் நின்று விளையாடு வாயெந்த வேளையுமே. 11

கல்லடி வில்லடி காலடி பட்டுங் கதியளித்தார்
நல்லடி யாருளத் தென்று மிருக்குமுன் நாயகனார்
சொல்லடிப் பாமலர் கொண்டுன் துணைத்தாள் தொழுந்
தொழும்பர்
செல்லடி யோடு துலைக்கச் செயலருள் செல்லமுத்தே. 12

ஏதேது துன்பம்வந் துற்றாலு முன்னெனக் குற்ற தெய்வம்
நீதானே யல்லது வேறுதரவுண்டோ நீயறிய
தீதான நெஞ்சத் துயர்தனைப் போக்கிச் செயல்புரிய
மாதாவே வந்திடு செல்லமுத் தென்னு மணிவிளக்கே. 13

ஆறு தரவில்லை நின்னை யல்லாது அடியனுக்கே
வேறு தரவெனக் கென்பயனுகும் வெளிமயக்கே
தீருத நெஞ்சத் துயர்தனைப் போக்கியென் சிந்தையின்கண்
வாரு யென செல்லமுத் தம்பிகா யென்குறை மாற்றுதற்கே 14

தென்னன் யிமையவன் செம்படவர்க்குத் திருமகளாய்
தன்னியன் ஞான சம்பந்தர்க் கின்பாலதரும் தாயெனுமாய்
அனனிய மிலலெனக காதார மாயிருந் தாண்டு கொணடென்
சென்ம விமோசனத் தென்குரு வாயமர் செல்லமுத்தே. 15

அருவா யுருவா யருவு நவாகி யடைந்த சென்மக்
கருவின்றி யெங்குங் கருவாகி நின்றதோர் காரணியே
அருமறை யாகமந் தேடறி தாமுன் னடிமலரென்
குருவாய் முடிமிசை வைத்தருள் செல்வக் குலமணியே. 16

நாவுணர் வோதிய காளிதா சன்னென நல்கியருள்
பாவுணர் ஞானச் சிவவாக்கியனைப் பதைகக வைத்தாய்
பூவமர் வேதன் சிரமொன் றறுத்தங்கை புன்பலிக்கே
சேவமர் தனபதிக் காணையிட்டா ளெங்கள செல்லமுத்தே. 17

பாகாய சொல்லியர் கண்வலை சிக்கிப் பாதவித்து
மோகாதி யல்லலில மூழ்கா தருள்செல்வ முத்துமையென்
தேகாதி சுற்றமவாழ் வெல்லாம்பொய் முத்திச் செயலருள்செய்
வாகா வெனச்சொலக் கேட்டருள்செய் சிவமாதவியே. 18

பூதாதி யண்டப் புவனப் பரப்பும் வான் புண்ணியரும்
மாதாதி சுற்றமும் வான்பொருள் முத்தி வழங்குகையும்
நீதானென் றெண்ணில் மறை யாகமங்கள் நிகழ்த்துமுயிர்த்
தீதான மாகியென் னுள்ளத் தமர்ந்தருள் செல்லமுத்தே. 19

உள்ளத்தி லன்புடையார்க் கிடராய்ச்சம னேலேகொண்டு
துள்ளிக் குதித்தோடி வந்திடுங் காலெம தூதுவரைக்
கள்ளக் கபடுசெய் பாசமறுத்தவன் காதுபற்றித்
தள்ளித் துறத்துவள் தாய் செல்ல முத்து தயாபரியே. 20

கன்ம வினையைக் கடந்த பெரியார் கருத்தி னுள்ளே
நன்மையுந் தீமையு மொன்ருய் நடிக்கும் நடனவல்லி
தன்மய மான சதானந்த சோதி சகசிலேச்
சின்மய மேடையுள் வீற்றிருப் பாளெங்கள்செல்லமுத்தே. 21

பொய்யிலா மன்னர்க்குப் பொற்றே ரளித்தோர் புலவனுக்குக்
கைகொண் டரசன் சரப்பளி தூக்கிக் கழுத்திலிட்டாய்
வையகம் போற்றும் சின்னூ ருகந்தெழில் மாதவர்க்குச்
செய்ய கருணையைக் கூறியிட்டா ளெங்கள் செல்லமுத்தே. 22

வம்புசெய் வேந்தர் தமக்கு மஞ்சார் எம வாதைக் கஞ்சார்
துன்பநரகத் துயர்க்கு மஞ்சார் துட்ட நோய்க்கு மஞ்சார்
நம்பி மயக்குஞ் சிறுமைக் கஞ்சார் செல்வ நாயகியென்
அம்பிகை தோத்திரத் தொன்றேனும் தான்கற் றறிந்தவரே 23

——— சுபம் ———

ஓம்
தத் சத்.



## செல்லமுத்தம்மன் பதிகம்.

### காப்பு.

சீருலவுஞ் சின்னுநகர் செல்லமுத் தம்மன் பதிகம்
பேருலகில் பாமுறையிற் பேசவே — ஆறினெடு
திங்களரா சேர்ந்துலவும் செஞ்சடையா னீன்றருளும்
ஐங்கரனே னின்ரு ளருள்.

## நூல்.

ஆதிவ ராகியுமென் னம்பிகைசெல் லம்மையருள்
பாதமலர் நம்முளத்தில் பாவித்தால் — வேதனையில்
இன்பமொடு கல்வி யிருநிதிபெற் றுய்வரெனும்
மன்பொருவும் மாமறையின் வாக்கு 1

வாக்கு மனமுடம்புன் மாலடிக்கே யற்பணமென்
பாக்கியமுன் தன்னருளின் பான்மையே — நோக்கிடுங்கால்
நல்லசித்தி யாஞ்சிவையே நான்மறைமேல் வீற்றிருக்கும்
செல்லமுத்தே யுன்றன் செயல். 2

செயலற் றிருந்துமுனந் தீவினையால் நொந்தென்
மயலற்ற சிந்தையுன்தாள் வைத்தேன் — அயலற்ற
தன்னியைநீ யாளத் தருணமிது செல்லமுத்தே
சின்னுதவப் பொன்னகர்வாழ் தேவி. 3

தேவிசிவ சங்காற்குத் தீயற்குப் பாவியுமென்
ஆவியென நின்றருள் செல்லம்மையே — மேவியயுன்
நாட்டங்கண் டேகியபின் நன்மகப்பே றெய்தியேதா
லாட்டங்கண் டேயுவப்பா ரன்று. 4

அன்றரசன் விக்கிரமற் காயிரமீ ராயிரமாய்ச்
சென்று வயதளித்த செல்லமுத்தே — அன்று
விதிக்கு விதியளித்த வித்தகியே நீயுன்
பதிக்குப் பலியளித்தாய் பார்த்து. 5

பார்த்தன்முத லைவர் படைகாத்துப் பாண்டிவளங்
காத்தவனி கோனடத்துங் காரணியே — ஊர்த்துவமாய்
குண்டலியா யென்னுள் குடிகொண்டு கோனடத்தக்
கண்டேனென் செல்லமுதத்தே காண். 6

காக்குங் கடனுனக்குக் காவாதிருந் தக்கால்
ஆர்க்குக் கடனுஞ்சொல் லம்மையே — மூர்க்கமொடு
வஞ்சனையிற் சிக்கி மயங்கினேன் என்னுடைய
நெஞ்சுதனில் வந்திருப்பாய் நீ. 7

நீதானெனக் குறுதாய் நீயன்றி வேறெனக்கிங்
கார்தான் துணைசொல் செல்லம்மையே — பேதையேன்

வெய்யில் விழும் புழுவாய் வெம்பினேன் வஞ்சர் முன்னுன்
கையி லபயமுறக் கண்டும். 8

கண்டாலென் சென்மவினைக் கட்ட றுங்கண் காக்ஷியுன்பேர்
விண்டாலும் போமே வெறுமைதான் — எண்டிசையும்
கோனடத்தி யென்னுள் குடிகொண்டு குண்டலியாய்
தானடிக்குஞ் செலலமுத்து தாள். 9

தாழ்ந்தார்க்குன் ஞமமே சம்பத்தாம் தன்மமின்றி
வாழ்ந்தார்க் கத்தின்றேல் வறுமையாம் — சூழ்ந்தவினை
எலலா மகற்றுவிக்கும் என்னிறைவி செல்ல முத்து
வல்லவியென் னெஞ்சமே வாழ். 10

—— சுபம் ——

ஓம்.
தத சத்.



## செல்லமுத்தம்மன்மீது சிந்து.

### காப்பு

சீரார் சிறந்த சின்னூர் செல்ல முத்தம் மன்துதியைப்
பேரார் வழிநடையாய்ப் பேசுதற்கு — பாரதனில்
காவேரி யுண்டாக்கும் காதுவினை தீர்த்தவுவாக்
காவேரி மாமலர்த் தாள் காப்பு.

### விருத்தம்.

கந்தமிகு வேதகுல மயிலே யெந்தன்
கண்மணியே கேளுமிந்த காசினிற்ருன்
விந்தையுடன் மகிதலங்கள் போற்றுகின்ற
விருப்பமுள்ள சின்னுநக ரதனில் வாழும்
அந்தமுடன் புகலரிது செல்லமுத்து
அம்பிகைதன் கிருபையினுல் அகிலமெல்லாம்
சிந்தையுவந் தருள்புரிய மகப்பே ரெய்திச்
செல்லுகிருர் நாம்போவோம் வாராய் பெண்ணே.

சிந்து.

மங்கை யிளங்குயில் ரஞ்சிதமே சின்னு
மாநகர் செல்குவோம் வாராய் செக
மாதவி செல்லமுத் தம்மனைக் கண்டு
மகப்பே ரடைகுவோம் சீராய்
பெண்ணே அவசியம் பிரியமா யேகிடப்
பேதையே நெஞ்சத் துயர்தூர வாகிட
அன்பு பெருகுஞ்செல் லம்மனைக் கும்பிட
அன்னத்தினும் நடைமிஞ்சிய பொன்னிற்றிகழ் தனவஞ்சியே(மங்

பாதச் சிலம்பிசை பாடயென துயிர்ப்
பாவையரே காலில் மாட்டு இளம்
பாவையே மூங்கிற் பிரம்பை யொத்த கையில்
பைம்பொன் வளையலைப் பூட்டு
மாதவி சன்னதிக் கேகிடச் சங்கைசேர்
மாமணித் தாழ்வடஞ் சூட்டு குளிர்
வான்மதி போன்ற வளர்பிறை நெற்றியில்
அஞ்சன மைதனைத் தீட்டு
காதலியுன்றன் கருவிழியோ வண்டு
கானிலுனது தனமல்லிகைச் செண்டு
மானமுடைய மதிவல்லோர்கள் கண்டு
மதித்தார்திரு மகள்நேரென வுரைத்தாலது சரியாகுமோ (மங்

காதல் மிகுந்திடும் ஆசைக் குயிலே
கடந்தோமடி சொந்த நகர்தான் கதி
காட்டும் பரம னருள் பெற்ற பேருக்குக்
கன்னியே யேதடி துயர்தான்
சீதமதிமுக மாதே யிதுவழி
செல்லடி யென்னோடு நீதான் செகம்
போற்றிடும எட்டப்ப னுட்டினிற் பேர்பெற்ற
தாஸ்ட்டிகன் சேர்சின்னு நகர்தான்
காணுது பாரடி காதலி முன்பாக
காசினி தன்னிலும் மின்னகர்க கொப்பாக
பேசினு லுமமது நேரோ சரியாகப்
பெண்ணிற் கணிகலமேபிள வண்ணக்கிளி மொழிமானே கேள்
(மங்

சாஸ்த்திரங் கற்ற பெரியோர்க ளிடம்மடந்
தங்கிடு வார்பெருங் கூட்டம் முத்தி
தானளிக் குஞ்சிவ சம்பு பதநிதஞ்
சார்ந்திடும் பேரின்ப நாட்டம்
மாத்தையில் மும்மாரி தூர்த்துச் செழிப்பதால்
மாதரே யேனிங்கு வாட்டம் வுயர்
வாகும் வருணங்கள் நான்கும் ஒன்ருக
வுவந்து சுகிப்பர் கொண் டாட்டம்

இத்தரை மீது இலங்கும் நகர்நாடி
எங்கினும் பார்க்க வியப்பான சீர்தேடி
கர்த்தனும் வந்து களிப்பானிவ் வூரடி
கதிர்வானிடு மின்போலவே ஒளிவீசிட நெடிதாகிய (மங்

பத்தி பத்தியான சித்திர மாளிகை
பார்க்கப் பளீரெனச் சொக்கும் எங்கும்
பார்க்கினும் மெல்லயீ திர்க்கேனுஞ் சொல்லறி
தாக்குமென்றே நெஞ்சு வககும்
சிதத முருகிடும் பாடல் ஒலிவேத
கீதங்களாம் நாலு திககும் இளந்
திங்கள் முடிப்பரன் றந்தரு ஊங்கரன்
சேவடியில் முடி தாக்கும் படி

சிந்தையு வந்தடி வந்தனஞ் செய்திடாய்
செங்கையால் மும்முறை குட்டியென் பின்னிடாய்
வெந்துயர் தீர்ககும் வேதாந்த மடம் பாராய்
விகசித்திர மாயைததிரள் துகள்பட் டிருள் துலையச்சிவ (மங்

சாதனந் தங்குஞ் சிவானந்த யோகியர்
சாற்றும் பிரணவ ஓசை அன்பு
தாண்டவ மாடவே பக்தர்க் குபதேசம்
சாற்றுதல் கேள்க்கப்பே ராசை
யாதவன் சுந்தர வள்ள லடியவர்க்
கன்ன மிட்டார் குரு பூசை சென்ற
ஆங்ரச ஆண்டினில் ஆவணி மூலநாள்
ஆக்கினுர் தொண்டாங் ராசை

அன்றவர் சந்ததி யென்றும் பெரும்பேரு
அல்லல் விளைத்தவர் தொல்லை யுற்ருர் பாரு

பொங்க மிருந்தநற் பொய்கை யிதுசீரு
பூவைக்கொரு புகழ்சேர் கன சீதைக்கொரு மணவாளனிச் (மங்

செங்கையில் சங்கொடு சக்கரம் பூணூலும்
சேர்ந்த துளபமி லங்க உயா
திங்களையும் ஒளி மாற்று கவுத்துவஞ்
செந்திரு மார்பிலதது லங்க
கங்கமர் வாகனன் தொண்டர்கு ழின்னகர்
காத்திட வந்தன ரிங்கே நாமள்
காதலுடன் பணி மாதவளாஞ் செல்ல
மாதுமை யாளிவன் தங்கை
கொண்டல் வண்ணன் சழ லின்றுவழி பட்டோம்
கோதையே காளி கருப்பனை முன்னிட்டோம்
கோமதியாள் கோவில் குறுகியாங் கும்பிட்டோம்
குலமேவிய அதிபாதகம் நிலையாதுமுன் நெடிதேகிட (மங்

வந்து வணங்கி யெழுந்து துதித்து
வலஞ் சுற்று வோமடி தாயை மனஞ்
சிந்தை யுவந்தருள் சந்ததம் வேண்டுமாய்ச்
சேவை புரிந்திடாய் நீயே
யிந்த உலகினில வந்துமை பாதமுன்
னேற்று தவா பெரும் பேயே சுகந்
தந்தருள செல்லமுத் தம்மன் திருப்புகழ்
சாற்று தவர்கசென்ன வாயே
சூரனைக் காளியாய் மார்பைப் பிளந்தவள்
சிட்டி முதற்றெழி லைந்தும் நிறைந்தவள்
சுத்த பாத்தில பின்னமாய் நின்றவள்
சுத்தர்க் கருள் சித்தா முயர் முத்திக்கொரு வித்தானவள் (மங்

ஆதி வராகி மகேஸ்பரி வைணவி
அம்பிகை கோமள வல்லி மதி
சோதி சொரூபி அபிராமி அந்தரி
சுந்தரி நாமமேழ் சொல்லி
போகம் விரும்பும் கடகரவி தனில்
பொங்கல விழாவடி யெல்லில் செகம்
போற்றத் திருநகர் ஏற்றத் திருக்கண்க
ளாற்ற ரவரவ ரில்லில்

செந்திரு மாதுமை பங்கனும் நாடிடச்
சேனுயர் தெய்வீக ரம்பையர் கூடிடச்
செய்ய மறையொலி மங்களம் பாடிடச்
செய கோஸ்ட்டிகள் குலவத் திகழ் நயமுட்டிய மிகவற்புத (மங்

இன்னகர் நங்கையர் பிள்ளை பிறந்தநாள்
என்றுங் குரவைசெய் யாரே தேவிக்
கின்னருள் காணிக்கை கொண்டு ஓர்திங்கள்
இணையடி யேற்றுவர் நேரே
கன்னலும் பின்னிடு சொன்னயப் பேதையர்
கைமுளக் கொட்டுவர் பாரே எந்தக்
காலமும் வெள்ளிசேய் வாரமும் வந்துநற்
காக்ஷிகாண்பார் பெரும் பேரே
கங்கையை முன்னிடு ஓடை குடவாசம்
காதலி ஐயனுர் கோயில் கீழ்பால் வாசம்
பண்டையள் பட்டத் தலச்சியிங் குத்தேசம்
பதுமத்துறை நாமாதொடு நிதிமெய்ப்பெரு பூமாதுறை (மங்

இத்தல வுத்தம மெய்த்தவ பக்தர்
இமையம முதற்சேது வாசம் காசி
எங்குஞ் சிவஸ்த்தல தீர்த்த மகிமையால்
ஏகிடுமே பவ நாசம்
அர்த்த மென்பார் தனம் அர்த்தமாய்த் தேடுதற்
கார்க்குஞ் சொல்வார் உப தேசம் மனத்
தையமி லைப்பசிக் கையமிட் டுண்பார்
அதிதிகள்பால் விசு வாசம்
அஞ்சலில் நெஞ்சினில் வஞ்சமி லாதசொல்
அலலல் விளையினும் சொல்லார் மனதுகல்
புஞ்சையும் நஞ்சையும் போற்றியுன் யாரேயில்
புலநத்திய பயிராகுவர் செலமூத் துமை புகழ்பாடுவர் (மங்

இன்னகர் பல்வளங் காதம் விரியினுஞ்
சின்னூ ரென்று சொல்லு வாரே பொது
ஏந்திழை சின்னுக்கு மன்னன் அளித்துடன்
இட்டார் அவள் பெரும் பேரே
பொன்னனை யாள்முனம் பூவண நாதரைப்
போற்றும் பொதுமகள் நேரே இவள்

பூதலம் மெச்சிடும் செல்லமுத் தம்மைதாள்
  பூசிக்க வந்தாளென் பாரே
    பூவையே சுந்தரி பூசையிது ரெடி
    பூதிப் பிரசாதம் வாங்கி வழிகூடிப்
    போவோமிக காருக்குச் சொந்த நகர்நாடி
புவிமெச்சிய மகவைப்பெறு தவமுற்றன தெனதுத்தமி (மங்

வாழியெம் மன்னை பிதாகுரு தெய்வம் வான்
  மண்புகழ் ஏகாதி பத்தியங் கோல்
வாழியெம் மெய்யறிவே சுயராக்ஷியம்
  வாழியிம் மாநகர் வாழியவே.

——— சுபம் ———

ஓம்.

தத் சத்.

## சின்னூர் தலமூர்த்தி சிறப்பு.

வந்தனை பலவுஞ் செய்து மங்கையும் மணாளன் றானும்
சிந்தையு ளுறைமெய்ஞ் ஞானச் செல்வனைப் பெற்றாராக
இந்தமா நகரின் பூர்வ யியற்கையும் யெம்பிராட்டி
நிந்தையில செல்ல முத்தாய் நிகழ்ந்தவா நிகழ்த்த லுற்றாம் 1

பொதுமகள் மரபில் வந்த பொன்னனை யாள்பூ வண்ணத்
ததிபனை நினைந்து மெய்யன் படிகளுக் கமுது செய்து
நதியணி வேணி யண்ணல் நல்லுருக் காண்பாள் எண்ணி
நிதிதருஞ் சித்தராய்ப் பொன் நெருப்பிலிட் டீந்தா ரய்யர். 2

சித்தர்பால் பொன்பெற் றையன் திருவுருச் சமைத்து அச்சோ
இத்தகை அழகனேவென் றிருகையால் முத்தமிட்டு
அத்தன துருவுகண்டாள் அம்பிகை உருவு காண்பாள்
நித்யகல் யாணிபூசை செய்வதாய் நேர்ந்தாள் சின்னு. 3

சின்னெனுந் தாசிமுன்னஞ் சேதுவாம் பதியைவிட்டு
மன்னனு மிளசை வேந்தன மதித்திட வதிந்தாளாக

கன்னியாஞ் சின்னுக்கிந்த கடிநகருதவிச் சின்னூர்
என்னவும் நாமந்தந்து இறைவன திருக்கை சேர்ந்தான் 4

காதலா யமர்ந்தாள் சின்னு காளியாஞ் சத்திபூசை
ஆதரவாகச் செய்த அருந்தவப் பேற்றலன்றே
மாதவம் பெருகுமிந்த மணிநகர் பெம்பிராட்டி
நீதியாஞ் செல்வம்நல்கி நிறைந்ததால் செல்லமுத்தே. 5

சந்த விருத்தம்.

மங்கல மலிந்துலவு தென்பாண்டி நாட்டிலே
    மகிபனு மிளசை யாள்வோன்
மன்னனு மன்னுபுகழ் சேதுபதி தன்னுறிய
    மாலைத் தவிர்ப்ப தாகத்
துங்கமிகு நால்வகைப் படைகொண்டு வந்துபித்
    தொல்வள மிகுந்த காவில்
சுரநதி யெனப் பெருகு ஏரியுஞ் செஞ்சாலி
    சூழ்பதி யமர்ந் திருக்க
திங்கள் நுதல் மங்குல் குழல் சின்னெனுந் தாசிபல
    சிற்றுண்டி விற்று வுணபாள்
செகவீர பூபதிக் கறுசுவைப் போனகம்
    செல்வம் வேண்டா தளித்தாள்
செங்கையிற் பொன்னினுக் குயம்விற்ற பொதுமாது
    செய்கைக கிரங்கி மன்னன்
செந்திரு வமைந்தபதி சின்னுக் களித்ததால்
    சின்னுநக ரென்பர் பெரியோர் 6

இன்னக ரமர்ந்திரவி மந்திர மியங்கு முறை
    யெழில்பூசை செய்து வருவாள்
எல்லையமர் நீங்கியரு ளெய்தவரு மெல்லையில்
    எழுந்திளசை மன்ன னினிதாய்த்
தன்னக ரடைந்தபொது சின்னுவெனு மங்கைசிவ
    சத்தியருள் பெற்ற வதனுல்
சஞ்சல மிலாதுதல மெங்கணும் நிறைந்து புயல்
    தண்மழை பொழிந்து வருமால்
பொன்னுலவு மின்னகர் வளஞ்சுரந் தெங்கணும்
    பூமா துளங் களிக்கப்

போதா தெனுஞ்சொ லிலே யாதாய மேயருள்
பொருந்துசிவ யோக மோங்கத்
தென்னாடு பாண்டிபுக ழின்னுடெ னம்பிகை
திருவருள் நாம மென்னே
செந்திரு வமர்ந்தினகர் செல்வமலி காரணம்
செல்லமுத் தென்பர் பெரியோர். 7

நீராருஞ் சடைமுடியார் பார்வதிக்கி நிகழ்த்திடுவார்
கையிலை முதற் காசி காஞ்சி
ஆரூர்சிற் றம்பலங்கா ளத்திகாழி யருணைமறைக்
காடுகளுக குன்றம் ஒற்றி
இராமேசங் கானப்பேர் நெல்லைமங்கை
இளசை கன்னி குற்ருல முதுகுன் றையார்
பேராறும் பெருந்துறை பூவணணங குன்றம்
பெருமதுரைப் பாண்டிவளஞ் சிறககுஞ் சின்னூர் 8

இத்தலமாந் திருநகரின் தவத்தின் மிக்கார்
எண்ணறிய பேரின்ப மெய்துமாறு
சித்தமது ஓர்வழியாய் நம்மை நோககித்
திங்ககற்றித் தவம்புரிவார் செய்கை நோக்கிப்
பத்தர்மனம் வேறுபடா தவர்கககு வேண்டும்
பதவியளித் திங்கமர்விற் பன்னியேயென்
றத்தனுரை செவிப்புகலும் அம்பாள் நெஞ்சத்
தனுபூதி கொண்டுசிவ னடியிற் ருழ்ந்து. 9

சம்புசிவன் விடைகொடுக்கச் சங்கரியும்
விடைபெற்றுத் தமியளாகிச்
செம்பவள வாயாளுந் தில்லைநகர் பதிகடந்து
சிறப்புற் ரேங்கும்
பம்புபுனல் நிறைந் தோங்கும் பயோததியாம்
நிகர்நதியின் கீழ்பா லிந்த
அம்புவியோர் கொண்டாட அமர்ந் திட்டாள்
சின்னுநகர் காத்திட்டாளே. 10

## விருத்தம்.

தில்லை வாழ்சிவ காமி திருவருள்
எல்லைகாண யிருந்த யியல்பினைச்

சொல்லவே துணிந் தின்னகர் துண்ணியே
வல்லவ ருளம் வந்தமை சொல்லுவாம். 11

வந்தநற் றுயுமிம் மானகரில் வாழ்
சிந்தைமுற் றியபெரி யோர்கள் சிந்தையில்
பந்தமுற் றியவினை பறிப்பன் யானென
அந்தரத் தில்அச ரீரிதோன்றவே. 12

தோன்றும் வார்த்தை துணுக்கெனக் கேட்டருள்
சான்ற தன்மைத் தகவுடை மேலவர்
ஆன்ற கேள்வி அறிஞர்தற் சூழவான்
போன்ற கங்கை பொருந்தின ராமரோ. 13

கூடின பெரியோர் தங்கள் குழுவொடுங் குறித்து நின்ற
ஓடையின் குணபால்ப் பொய்கை உத்தரதிசை விசும்பில்
பாடிய பனுவ லென்னப் பரையருள் நிமித்தம் மென்ன
நாடிய பொருள்கை கூடும் நற்றவம் பலித்த தென்ன. 14

நல்நிமித்த மெனப் பெரியோர் சொலக் கேட்டின்
நதிக் கறையில் நாம நூபம்
சொல் மிகுந்த வேதியர்பாற் புரவலர்பால்
சோதிடர்பால் சுருதி யாய்ந்து
செல்வமா யிவணடைந்த செயல்கார
ணப்பெயராஞ் செல்லமுத்து
வல்லவியென் றெருநாமம் வகுத்திட்டார்
பல்பேருந் துதித் திட்டாரே. 15

இந்தவிதத் திருபெயர்பெற் றெம்பிராட்டி
இவணடைதற் கின்னகர்செய் தவமே யல்லால்
முந்தையோர் தவப்பயனுய் முடிந்ததேயோ
முடி வான கலியுகத்தின் முதிர்ச்சி தோன்ற
வந்தபெருந் தவக் கொழுந்தோ யெதுவென் றின்னும்
வழுத்துவேன் புல்லியனென் வாக்கால் முன்னம
சிந்தையுவப் பாயடியார் செய்துவைத்த
சித்ரமணி மேடையினின் றிலங்குஞ் சீரே. 16

வந்துவந்து தொழுமன்பர் மகப்பே றெய்தி
மகிழ்வ தஞ்சலெனுங் குறியோர் செங்கை காட்ட
முந்துமுந்து வெனவன்பர் நெருக்கா லுள்ளம்
முனியாது சேவைசெயும் முயற்சியாலே
அந்திசந்தி யெக்காலும் செல்லமுத்து
அம்மைபதம் அடைவார் முன்படைந்த துன்பம்
கந்துகந்தாய் நொந்து நைந்து கரந்து போமென்
காதலியே சிரவணத்திற் கருத்தை யூன்றே. 17

நதிமதி கொன்றை வேணி நம்பர்த மிடத்தாய் போற்றி
நதிபதி குணவடக்கில் நண்ணினுய் போற்றி நின்சன
னதிவலம் வருமன்பர்க்கு நாடுவ தளித்தாய் கண்டின்
னதி துவன் றுணர்தற் கெட்டா நமபறை செல்லமுத்தே. 18

அந்தரி போற்றி போற்றி அருள்மறைப் பொருள்களாய
சுந்தரி போற்றி மாயன் சோதரி போற்றி செந்திற்
கந்தனை யீன்ருய் போற்றி கழலினைத் தந்து நாயேன்
சிந்தனை யகற்றவந்த செல்லமுத துமையே போற்றி 19

இடமக லிமையக் குன்றி லெழுந்தனை போற்றி தென்னன்
தடாதகை நாமம்பெற்றுத் தாங்கினுய் செங்கோல் போற்றி
படிதனி லடியேன் செய்த பழவினை யறுத்து முத்தி
திடமுட னளிக்கவந்த செல்லமுத் துமையே போற்றி 20

அருமறை முடியில் நின்று ஆரண மளித்தாய் போற்றி
கருவுரு தமர்ந்தோர் மெய்யிற் கலந்தனை போற்றி போற்றி
குருவுமா யெனது நெஞ்சங் குடிபுகுந்தமல ஞானத்
திருவரு ளளிகக வந்த செல்லமுத் துமையே போற்றி. 21

அம்மையும் விடுசிகால வழுங்குறு பிணிகள் யாவும்
செம்மைசே ரிரவிகண்ட திமிரம்போல் சேணில் நீக்கி
மும்மையு முணர்ந்த ஞானி முழுதுணர் மெய்யிற் றேன்றிச்
சின்மய வடிவாய் நின்ற செல்லமுத் துமையே போற்றி. 22

அகிலகா ரணமா யுண்ணின் றுக்கலோ டைந்தும் பேணிச்
சகலபே தங்களாகித் தத்துவ முணர்வார்க் கண்பின்

சுகசக பரசீ வைக்யஞ் சொன் மனோன் மணியாய் ஞான
முகனமர்ந் தளிக்குஞ் செல்ல முத்துநம் பரைதாள் வாழீ 23

—— சுபம் ——

ஓம்.
தத் சத்:

# செல்லமுத்தம்மன்மீது முளைக் கும்மி.

சிறந்த கண்ணன் சோதரி மாதவி தேவியென் செல்லமுத்து
செஞ்சரணங் துதிப் - போமே அவளருள்கொண்
டஞ்சும் வினையொளிப் போமே. 1

அறஞ் சிறந்தொளிர் ஞானவினோதனி அம்பிகை செல்லமுத்து
அம்சத்தின் மேலெழுங் தாயே அடியர்வினை
தும்சப்பட வெழுங் தாயே, 2

கரங்கு போலுழல் பேய்மன வாழ்வினை காளியென் செல்லமுத்து
காட்டி மறைக்க வந் தாயே அடியன்வினை
யோட்டி யொளித்திடுந் தாயே. 3

வரம் பெருஞ்சுக வாசிகளின்புரை வாழ்த்தும்யெம் செல்லமுத்து
வல்லவி யென்றுன் ஞமமே சொல்பவர்க்கெல்லாம்
வழிவழி செல்வம் பொங் குமே 4

குணங்கெடா நெறியாழ்புவி காவலன் ராசன் விக்கிரமாதித்தன்
கொண்ட வரமோ ராயிரம் எம் செல்லமுத்து
கொடுத்த வயதீ ராயிரம், 5

வணங்கி டானுனை வீழ்சிவ வாக்கியன் நாஸ்த்திகப் பொய்யன்
மெய்யை
வாட்டி வதைத்த சிங் கமே செல்லமுத்தன்பின்
வழிபடச் செய்தாளங் கமே. 6

நவம் பொருந்திய ஷோள்ச ளென்னுளும் நாடாதென் செல்லமுத்து
நாட்ட மிருக்கும் போதிலே அடிபரவுத்
தேட்ட முறைப்பாய் காதிலே. 7

சிவந்த செஞ்சடை நாதன் மனோன்மணி ராச ராசேஸ்பரியே
தென்னன் செங்கோல் புரிந் தாயே துறந்தருள்சேர்
சின்னுநக ருகந் தாயே. 8

துறந்த ஞானமெய் முனிவர்க ளுள்ளம் தோன்றிடும் செல்ல
சொல்வ துன்நாம மல்லவா அவனியெங்கும் [முத்து
தோன் றுஞ் சொரூபி யல்லவா. 9

நிறைந்த மாதவர் மூவர்கள் போற்றிடும் நீதிசேர் செல்லமுத்து
நித்ய கல்யாணி யன்னமே மன் மூருகி
நினைப்பவர்க் கீவாள் சொர்ணமே. 10

மலர்ந்த தாமரை மேலுறை வேதியன் வேதா விதியதனை
மாற்றும் வல்லவி யல்லவா யென் செல்லமுத்து
மகிமை யுனக்கே சொல்லவா, 11

கலங்கிடான் மகிடான் வலி சூரனைக் காலில் மிதித்துலகு
காக்குங் கருணைக் கண் ணியே அடியனுள்ளக்
கவலை யொழிப்பா யுண் ணியே. 12

நவின்ற நான்மறை தேடரி தாம்பரன் ஞானக் கூத்துக் கிசைய
நடிக்கும் நடன வல்லியே அடியன் என்றும்
படிப்ப துன்னுமம் சொல்லியே. 13

சிவன் சிரோன்மணி தேவி பராபரி தேசோன்மய மாஞ்செல்ல
முத்து நீடூழி வாழியே அடியன் சின்ன
முத்து தமிழும் வாழியே 14

வேறு சந்தம்.

மங்களந் தங்கிடுந் திங்கள் மும்மாரி
வளங்கிடும் பொன்னக ரேது சின்னு

மானகராமடி மாது செக
மாதவி செல்லமுத் தம்மன் திருக்கண்
மகிமை என் பாரே எப் போது 15

க்ங்கையுந் திங்களுங் கொன்றை சூழ்வேணியன்
கண்ணுதல் போற்றிடுந் தேவி யிந்தக்
காசினிக் கெல்லாம்ஓ ராவி சின்னூர்
காவல்செய் செல்லமுத் தம்மனே யுள்ளக்
கருத்தில் வையார் பெரும் பாவி. 16

அந்தரி சுந்தரி மந்திர வேதகி
ஆரண மோதிடும் வாயாள் தேவிக்
கன்பர் தமை யென்றுங் காயாள் செக
அத்த னருள் சீவன் முத்தன் மனோன்மணி
அம்பிகை யாவர்க்குந் தாயாள். 17

பந்தபா சந்தனை யெந்தநல் வேளையும்
பார்க்கி லதுபெருந் தொல்லை உன்னிப்
பார்த்தவர்க்கே தோணும் எல்லை செக
பாரதி செல்லமுத் தம்மைதன் பத்திப்
பனுவற் றுதியது சொல்லே. 18

வேறு சந்தம்.

முச்சகமும் மெச்சுமக மாயி செல்ல
முத்துபரா சத்தி யெங்கள் தாயி பர
முத்தரவர் சித்தமதில் நித்தம்விளை யாடுமலங்
காரி உப காரி. 19

பச்சமற வாத அன்பர் கூட்டம் சிவ
பத்தியில் நின்றுடுவர் கொண் டாட்டம் செக
பாரதியாள் செல்லமுத்து ஊரதனைப் பெற்றபெரும்
பாக்யம் வெகு சிலாக்யம். 20

சிங்கமுகத் தண்டிகையின் மீது யெங்கள்
செல்லமுத்து வீற்றிருக்கும் போது மதி
சீதமுக மாதரொரு கோடிபல கூடி துதி
பாடும் கழல் கூடும். 21

மங்கலமாம் பொங்கல்விழாக் கண்டு யிள
மாதர்பலர் சாடிமுளைக் கொண்டு செல்ல
மாதவிமேற் பாவொலியாற் சேவைசொலி அங்கைகொட்டி
மகிழ்வார் அகம் நெகிழ்வார். 22

ஆவதுகோ வென்பர் சக வாதி பலர்
அய்யனேகோ வென்பர் அக நீதி தேரா
அகடுறுத்தி வாடினவர் கவறுகுத்தி யாடிவரு
வார்கள் வெகு பேர்கள். 23

பாவவினை தூரமனம் நாடி இளம்
பாலரொடு காளையர்கள் கூடி சீவ
பரமடுத்த சிந்தையினர் கரகமெடுத் தாடிவரும்
ஆட்டம் வெகு கூட்டம். 24

மண்டையொடு கண்ணில்வலி கொண்டார் எங்கள்
மாதவிமேல் நேமுகமே விண்டார் யிங்கு
மாவிளக்குச் சோதியெங்கு மேவிளக்கிப் பொய்யிருளை
மாற்றும் படி தோற்றும். 25

வண்டுலவும் வாசமலர்ச் செண்டு தட்டில்
வாழைபலா முக்கனிகற் கண்டு கொண்டு
மாதவிமுன் தூபதீப ராதனையின் சோதிகாண
வருவார் பூதி பெறுவார். 26

தாளமொடு பம்பைமணி மேளம் சுரம்
தம்பூர்கிடு கிட்டியொடெக் காளம் சின்னஞ்

சத்தமிடி யொத்துபுவி யெத்திசையும் பேரொலியாய்த்
தழங்கும் மிக முழங்கும். 27

மாழைமணி வாசமல ராரம் செல்ல
மாதவிக்குச் சூடுமலங் காரம் காண
மங்கல மலிந்துலவக் கந்தருவ மங்கையர்கள்
வாழ்த்தும் பணிந் தேத்தும். 28

சீருசிறப் போங்குயர் சின் னூரும் நீதிச்
செல்லமுத்து அம்மன் பதச் சீரும் மற்றும்
செங்கமல மாதுகலை நங்கையுட னெங்குருவும்
தேனே யின்னம் நானே. 29

பாருலவச் சொன்ன தமிழ்க் கீதம் அம்மன்
பாதமலர் போற்றுவதால் வேதம் எனப்
பத்தியுடன் எத்திசையும் உத்தமர்கள் நத்திடவே
ஊழி காலம் வாழி. 30

சாணவியி லங்கணநீர் சார்ந்தவுட னேபுனித
மானதுடன் மங்கலநீ ராவதுபோல் — யானுரைசெய்
புன்பாவுந் தெய்வீகப் பொன்னடிக்கே ஆக்குதலால்
இன்பாகும் நூலே இது.

—— சுபம் ——



ஓம்.
தத் சத்.



ஆதி விநாயகர் துணே.

வெண்பா.

இச் செகத்தில் யென்றனுக்கு யின்பமுறு சற்குருவாம்
சச்சிதா னந்தத் தயாநிதியோன் — லச்சியமாய்
சப்தப் பிரபந்தம் தானியற்றி ஞன்வாணி
ஒப்பியிது வேதமென்று ஓத

உரை.

சப்தப் பிரபந்தம் யென்ற யித் தெய்வீகத் தன்மை நிறை
தள்ள கோவையில் ஏழு தேவதைகள் பேரில் தோத்திரப் பாக்கள்
தொகுத்தும். வழிநடைச் சிந்து என்று தேவ நாட்டவர்கள் சத
பதியினராய்த் தனயரை வேண்டி மதிநலமுடநற் கதிதகும் புவ
யில் சின்னுமா நகரத் தேவியாய்வேதம் மன்னு செல்லமுத்
மாதவள் பாதம் உத்தமமான சித்தமதுடனே நத்தியே போற்ற
புத்திர ரடைந்து பொன்னெளிர் கற்பக நாடும்புவியுறை யில்
னகர் சின்னுமா நகருக் கீடில்லை எந்தநகரா ஞலும் இனிமேல் சி
தையில் எண்ணு திருப்போம்.இனி நம் சொந்த நகரிது என
அவர்மன துவு கந்து வாழ்ந்து நல்வுயர்வதுபெற்ற சின்னுமாநக
சேத்திரத்திற்குப் புண்ணிய நறுமணம் நண்ணியே மணக்க
பூமாதோங்க நாமா திலங்கச் சின்னமுத் தென்னும் சச்
தானந்தம் சொன்னய வாககால் சூட்டப் பெற்றது. அன்பர்கள
படித்து இன்புற வாழ்க.

இப்படிக்கு,

சர்வமத ஐக்ய சாது சங்க திருக்கூட்டத் தொண்ட

புலவர்,

வெ. க. சுப்புவிநாயகம்,

பெருநாழி.

—— இந்நூல் ——

அருப்புக்கோட்டை முருகன் பிரஸில் அச்சிடப்பட்டது.